# ஞானஸ்நானம்
# அல்லது திருமுழுக்கு

ஞானஸ்நானம் என்ற சொல் ஆங்கில வேதாகமத்தில் ''பாப்டிசம்'' (Baptism) என்றும், மூல பாஷையாகிய கிரேக்க மொழியில் ''பாப்டிசோ'' (Baptizo) என்றும் வளங்கப்படுகிறது. தமிழ் வேதாகமத்திற்குப் புதிய மொழி பெயர்ப்புச் செய்தோர் இதற்குத் திருமுழுக்கு என்ற சொல்லைப் பயன்படுத்தியுள்ளனர். ''பாப்டிசோ'' என்னும் கிரேக்கச் சொல்லுக்கு முழுக்கு அல்லது அமிழ்த்து
(To dip into or to Immerse) என்பதே பொருள்.

''விசுவாசமுள்ளவனாகி ஞானஸ்நானம் பெற்றவன் இரட்சிக்கப்படுவான், விசுவாசியாதவனோ ஆக்கினைக்குள்ளாகத் தீர்க்கப்படுவான்'' என்பது தேவ வார்த்தை. இத்திருவசனத்தின்படி ஒருவன் இரட்சிக்கப்பட கர்த்தர்மேல் விசுவாசம் வைத்தாலும், ஞானஸ்நானம் பெற்றுக்கொள்ளுதல் அவசியம் என்பதை தெளிவுபடுத்துகிறது.

''நீங்கள் மனந்திரும்பி, ஒவ்வொருவரும் பாவமன்னிப்புக் கென்று இயேசு கிறிஸ்துவின் நாமத்தினாலே ஞானஸ்நானம் பெற்றுக்கொள்ளுங்கள்'' என்று வேதாகமத்தில் எழுதப்பட்டிருக்கிறது. இதனால் மனந்திரும்பி பாவ மன்னிப்பைப் பெற்றுக்கொண்டவர்களுக்கே ஞானஸநானம் கொடுக்கப்பட வேண்டுமென்ற உண்மை புலனாகிறது.

யோவான் தன்னிடம் மாய்மாலமாய் ஞானஸ்நானம் பெற்றுக்கொள்ள வந்த சதுசேயர், பரிசேயரை நோக்கி: ''விரியன் பாம்புக் குட்டிகளே! வருங்கோபத்துக்குத் தப்பித்துக்கொள்ள உங்களுக்கு வகைகாட்டினவன் யார்? மனந்திரும்புதலுக்கு ஏற்ற கனிகளைக் கொடுங்கள்.'' என்றார். தங்கள் பாவங்களை அறிக்கையிட்டவர்களுக்கே அவர் ஞானஸ்நானம் கொடுத்தார்.

ஆதித் திருச்சபையில் முழுக்கு ஞானஸ்நானமே கொடுக்கப்பட்டது. யோவான் கொடுத்த மனந்திரும்புதலுக்கான ஞானஸ்நானமும், இயேசுவின் சீஷர்கள் கொடுத்த ஞானஸ்நானமும் தெளிப்பு ஞானஸ்நானமாகவோ (ளுிசனைெடைபெ டீயிவளைஅ) அல்லது ஊற்று ஞானஸ்நானமாகவோ ீழரசபைெ டீயிவளைஅ) இருந்திருக்குமானால் அவர்கள் தண்ணீர் மிகுதியாக உள்ள இடத்திற்குச் சென்றிருக்க அவசியமே இல்லை. 2

''இயேசு ஞானஸ்நானம் பெற்று, ஜலத்திலிருந்து கரையேறினவுடனே, இதோ, வானம் அவருக்குத் திறக்கப்பட்டது, தேவ ஆவி புறாவைப்போல இறங்கி, தம்மேல் வருகிறதைக் கண்டார்.''- மத் 3: 16

''சாலிம் ஊருக்குச் சமீபமான அயினோன் என்னும் இடத்திலே தண்ணீர் மிகுதியாயிருந்தபடியினால், யோவானும் அங்கே ஞானஸ்நானங் கொடுத்துவந்தான், ஜனங்கள் அவனிடத்தில் வந்து ஞானஸ்நானம் பெற்றார்கள்.''- யோவான் 3: 23

''இரதத்தை நிறுத்தச்சொன்னான். அப்பொழுது பிலிப்பும் மந்திரியும் ஆகிய இருவரும் தண்ணீரில் இறங்கினார்கள், பிலிப்பு அவனுக்கு ஞானஸ்நானங்கொடுத்தான். அவர்கள் தண்ணீரிலிருந்து கரையேறினபொழுது, கர்த்தருடைய ஆவியானவர் பிலிப்பைக் கொண்டுபோய்விட்டார். மந்திரியும் அப்புறம் அவனைக் காணாமல், சந்தோஷத்தோடே தன் வழியே போனான்.''- அப்போ. 8: 38-39

## ஞானஸ்நானத்தின் இரகசியம்

1. ஞானஸ்நானம் தேவனுடைய ஆலோசனைக்கும், கட்டளைக்கும் நம்மைக் கீழ்ப்படியச் செய்கிறது.

''பரிசேயரும் நியாயசாஸ்திரிகளுமோ அவனாலே ஞானஸ்நானம் பெறாமல் தங்களுக்குக் கேடுண்டாகத் தேவனுடைய ஆலோசனையைத் தள்ளிவிட்டார்கள்.''- லூக்கா 7: 30

2. ஞானஸ்நானத்தால் நாம் தேவ நீதியை நிறைவேற்றுகிறோம்.

''இயேசு அவனுக்குப் பிரதியுத்தரமாக: இப்பொழுது இடங்கொடு, இப்படி எல்லா நீதியையும் நிறைவேற்றுவது நமக்கு ஏற்றதாயிருக்கிறது என்றார். அப்பொழுது அவருக்கு இடங்கொடுத்தான்.''- மத். 3: 15

3. ஞானஸ்நானம் நம்மைக் கிறிஸ்துவுக்குள்ளாக்கிறது

''கிறிஸ்து இயேசுவுக்குள்ளாக ஞானஸ்நானம் பெற்ற நாமனைவரும் அவருடைய மரணத்துக்குள்ளாக ஞானஸ்நானம் பெற்றதை அறியாமலிருக்கிறீர்களா?''- ரோமர் 6: 3 3

4. ஞானஸ்நானத்தால் நாம் கிறிஸ்துவைத் தரித்துக் கொள்ளுகிறோம்.

''ஏனெனில், உங்களில் கிறிஸ்துவுக்குள்ளாக ஞானஸ்நானம் பெற்றவர்கள் எத்தனைபேரோ, அத்தனைபேரும் கிறிஸ்துவைத் தரித்துக்கொண்டீர்களே.''- கலா. 3: 27

5. ஞானஸ்நானம் நாம் தேவனோடு செய்யும் உடன்படிக்கை.

“அதற்கு ஒப்பனையான ஞானஸ்நானமானது, மாம்ச அழுக்கை நீக்குதலாயிராமல், தேவனைப்பற்றும் நல்மனச்சாட்சியின் உடன்படிக்கையாயிருந்து, இப்பொழுது நம்மையும் இயேசுகிறிஸ்துவினுடைய உயிர்த்தெழுதலினால் இரட்சிக்கிறது,”– 1 பேதுரு 3: 21
6. ஞானஸ்நானம் நாம் தேவனோடு செய்யும் உடன்படிக்கைக்குச் சாட்சி.

“பூலோகத்திலே சாட்சியிடுகிறவைகள் மூன்று, ஆவி, ஜலம், இரத்தம் என்பவைகளே, இம்மூன்றும் ஒருமைப்பட்டிருக்கிறது. ..... தேவனுடைய குமாரனிடத்தில் விசுவாசமாயிருக்கிறவன் அந்தச் சாட்சியைத் தனக்குள்ளே கொண்டிருக்கிறான்” 1 யோவான் 5: 8–10
7. ஞானஸ்நானத்தால் நாம் தேவனுடைய ராஜ்யத்துக்குள் பிரவேசிக்கிறோம்.

“இயேசு பிரதியுத்தரமாக: ஒருவன் ஜலத்தினாலும் ஆவியினாலும் பிறாவாவிட்டால் தேவனுடைய ராஜ்யத்தில் பிரவேசிக்கமாட்டான் என்று மெய்யாகவே மெய்யாகவே உனக்குச் சொல்லுகிறேன்.”– யோவான் 3: 5
8. ஞானஸ்நானம் நம்மை உயிர்த்தெழுந்த கிறிஸ்துவோடு ஒன்றாக இணைக்கிறது.

“மேலும் பிதாவின் மகிமையினாலே கிறிஸ்து மரித்தோரிலிருந்து எழுப்பப்பட்டதுபோல, நாமும் புதிதான ஜீவனுள்ளவர்களாய் நடந்துகொள்ளும்படிக்கு, அவருடைய மரணத்திற்குள்ளாக்கும் ஞானஸ்நானத்தினாலே கிறிஸ்துவுடனேகூட அடக்கம்பண்ணப்பட்டோம். ஆதலால் அவருடைய மரணத்தின் சாயலில் நாம் 4 இணைக்கப்பட்டவர்களானால், அவர் உயிர்த்தெழுதலின் சாயலிலும் இணைக்கப்பட்டிருப்போம்.”– ரோமர் 6: 4–5

## ஜலத்தினால் ஞானஸ்நானம்

ஜலத்தினால் ஞானஸ்நானம் என்பது ஒரு அடக்க ஆராதனை. ஒரு மனிதனை மரிப்பதற்காக அடக்க ஆராதனை செய்வதல்ல, இறந்துபோன ஒருவருக்காகவே அந்த ஆராதனை நடத்தப்படுகிறது. எனவே ஒருவர் கிறிஸ்துவுக்குள் “மரித்தவராக” இருப்பின், அவர் தனது பழைய வாழக்கையை ஜலத்தினாலான ஞானஸ்நானத்தில் அடக்கம் செய்கிறார். மேலும் அவர் கிறிஸ்துவுக்குள் ஒரு புதுச் சிருஷ்டி என்பதை செயல் பூர்வமாக வெளிப்படுத்தும்படியும், அறிக்கை செய்யும்படியும் நீரை விட்டு ஒரு புது வாழ்வுக்காக உயிர்த்தெழுந்தவராய் வெளியே வருகிறார்.

“ஆகையால் கிறிஸ்துவுடனேகூட நாம்மரித்தோமானால், அவருடனேகூடப் பிழைத்தும் இருப்போம் என்று நம்புகிறோம். மரித்தோரிலிருந்து எழுந்த கிறிஸ்து இனி மரிப்பதில்லையென்று அறிந்திருக்கிறோம், மரணம் இனி அவரை ஆண்டுகொள்வதில்லை. அவர் மரித்தது, பாவத்திற்கென்று ஒரேதரம் மரித்தார், அவர் பிழைத்திருக்கிறது, தேவனுக்கென்று பிழைத்திருக்கிறார். அப்படியே நீங்களும், உங்களைப் பாவத்திற்கு மரித்தவர்களாகவும், நம்முடைய கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவுக்குள் தேவனுக்கென்று பிழைத்திருக்கிறவர்களாகவும் எண்ணிக்கொள்ளுங்கள்.”– ரோமர் 6: 8–11

## புதுச் சிருஷ்டி

“இப்படியிருக்க, ஒருவன் கிறிஸ்துவுக்குள்ளிருந்தால் புதுச்சிருஷ்டியாயிருக்கிறான், பழையவைகள் ஒழிந்துபோயின, எல்லாம் புதிதாயின.”– 2 கொரி. 5: 17
ஜலத்தினாலான ஞானஸ்நானத்தின்மூலம் ஏனைய மக்களுக்கு நாம் இனிமேலும் இருளின் இராஜ்யத்தைச் சேர்ந்தவர்களல்ல என்பதை பகிரங்கமாக அறிக்கை செய்கிறோம். மேலும் நாம் கிறிஸ்துவுக்குள் புதுச் சிருஷ்டியாக, தேவனுடைய இராஜ்யத்தைச் சேர்ந்தவர்களாக இருக்கிறோம் என்பதையும் வெளிப்படுத்துகிகிறோம்.

## விசுவாசித்தலும் ஏற்றுக்கொள்ளுதலும்

ஆண்டவராகிய இயேசு கிறிஸ்துவை விசுவாசிக்கிறவன் ஆக்கினைக்குள்ளாகத் தீர்க்கப்படான். இயேசு கிறிஸ்துவினிடத்தில் விசுவாசமாயிருக்கிறவன் நித்திய 5
ஜீவனை உடையவனாயிருக்கிறான். ஆண்டவராகிய இயேசு கிறிஸ்து எல்லா மக்களுக்கும் கிருபையாக இரட்சிப்பைத் தர ஆயத்தமாய் இருக்கிறார்.
ஒருவர் தனது பாவங்களைக் குறித்து உண்மையாக மனஸ்தாபப்பட்டு, ஆண்டவராகிய இயேசு கிறிஸ்து தன்னுடைய பாவங்களுக்காகவும் சிலுவையில் தனக்குப் பதிலாக இரத்தம் சிந்தி மரித்தார் என்பதை மனப்பூர்வமாக நம்பி, தனது பாவங்களை அவரிடம் அறிக்கையிட்டு, மனந்திரும்பி அவரை விசுவசித்து, இயேசுவை தனது உள்ளத்தில் ஏற்றுக்கொண்டு தனது வாழ்க்கையை முற்றிலுமாக அவரிடம் ஒப்புக் கொடுக்கும்போது இரட்சிப்பைப்பெற்று, பாவ மன்னிப்பின் நிச்சயத்தோடு வாழலாம்.

“தேவன், தம்முடைய ஒரேபேறான குமாரனை விசுவாசிக்கிறவன் எவனோ அவன் கெட்டுப்போகாமல் நித்தியஜீவனை அடையும்படிக்கு, அவரைத் தந்தருளி, இவ்வளவாய் உலகத்தில் அன்புகூர்ந்தார். உலகத்தை ஆக்கினைக்குள்ளாகத் தீர்க்கும்படி தேவன் தம்முடைய குமாரனை உலகத்தில் அனுப்பாமல், அவராலே உலகம் இரட்சிக்கப்படுவதற்காகவே அவரை அனுப்பினார். அவரை விசுவாசிக்கிறவன் ஆக்கினைக்குள்ளாகத் தீர்க்கப்படான், விசுவாசியாதவனோ, தேவனுடைய ஒரேபேறான குமாரனுடைய நாமத்தில் விசுவாசமுள்ளவனாயிராதபடியினால், அவன் ஆக்கினைத் தீர்ப்புக்குட்பட்டாயிற்று.”– யோவான் 3: 16–18

“என்னவென்றால், கர்த்தராகிய இயேசுவை நீ உன் வாயினாலே அறிக்கையிட்டு, தேவன் அவரை மரித்தோரிலிருந்து எழுப்பினாரென்று உன் இருதயத்திலே விசுவாசித்தால் இரட்சிக்கப்படுவாய். நீதியுண்டாக இருதயத்திலே விசுவாசிக்கப்படும், இரட்சிப்புண்டாக வாயினாலே அறிக்கைபண்ணப்படும். அவரை விசுவாசிக்கிறவன் எவனோ அவன் வெட்கப்படுவதில்லையென்று வேதம் சொல்லுகிறது.”– ரோமர் 10: 9–11

## யார் ஞானஸ்நானம் எடுக்க வேண்டும் ?

மனந்திரும்பி ஆண்டவராகிய இயேசு கிறிஸ்துவை தமது சொந்த இரட்சகராக ஏற்றுக்கொண்டவர்கள் ''விசுவாசிகள்'' என்று அழைக்கப்படுகிறார்கள். ஒவ்வொரு விசுவாசிக்கும் தான் பெற்றுக்கொண்ட இரட்சிப்பின் அனுபவத்தைப் பற்றிய தெளிவு இருக்கவேண்டும். அதைத் தொடர்ந்து ஆண்டவராகிய இயேசு கிறிஸ்துவைப் பின்பற்றும் புதிய வாழ்க்கையை ஆரம்பிக்கும் ஒவ்வொரு விசுவாசியும் ஞானஸ்நானம் பெற்றுக்கொள்ள வேண்டும்.

''பின்பு, அவர் அவர்களை நோக்கி: நீங்கள் உலகமெங்கும் போய், சர்வ சிருஷ்டிக்கும் சுவிசேஷத்தைப் பிரசங்கியுங்கள். விசுவாசமுள்ளவனாகி ஞானஸ்நானம் பெற்றவன் இரட்சிக்கப்படுவான், விசுவாசியாதவனோ ஆக்கினைக்குள்ளாகத் தீர்க்கப்படுவான்.''– மாற்கு 16: 15–16 6

## மனந்திரும்புதல்

''மனந்திரும்புதல்'' என்ற அனுபவத்தோடுதான் கிறிஸ்தவ வாழ்க்கை ஆரம்பமாகிறது. கிறிஸ்தவ குடும்பத்தில் பிறந்திருப்பதினாலோ, கிறிஸ்தவப் பெயரை வைத்திருப்பதினாலோ, ஒருவர் உண்மைக் கிறிஸ்தவராகிவிட முடியாது. ஒருவர் கிறிஸ்தவத்தின் மீது நாட்டம் கொண்டிருக்கலாம், கிறிஸ்தவக் கொள்கைகளைக் கடைப் பிடிக்கலாம், அது நல்லதுதான் ஆனால் உண்மையான கிறிஸ்தவ வாழ்க்கை ''மனந்திரும்புதல்'' என்ற அனுபவத்தில்தான் ஆரம்பமாகிறது.

இந்த உலகத்தில் பிறந்த ஒவ்வொருவருமே மனந்திரும்ப வேண்டிய அவசியம் உண்டு, ஏனெனில் நாம் எல்லாரும் பாவஞ்செய்து, தேவமகிமையற்றவர்களாகி இருக்கிறோம்.

பாவத்தை விட்டு பரிசுத்த தேவனுக்கு நேராக நம் வாழ்க்கையைத் திருப்புவதே மனந்திரும்புதல் என்பதாகும். ''மனந்திரும்புங்கள்'' என்ற வார்த்தை பரிசுத்த வேதாகமத்தில் 100 தடவைகளுக்கு மேலாக குறிப்பிடப்பட்டிருப்பதைக் காணலாம். ஆண்டவராகிய இயேசு கிறிஸ்து ''மனந்திரும்பி, சுவிசேஷத்தை விசுவாசியுங்கள்'' என்று பிரசங்கித்தார்.

மனஸ்தாபப்பட்டு மனந்திரும்புதல் என்பது ஆழமான துக்கத்தையும், அன்பும் பரிசுத்தமும் நிறைந்த தெய்வதிற்கு விரோதமாகப் பாவம் செய்து விட்டோமே என்ற ஒரு உண்மையான மனவருத்தத்தையும், உள்ளம் உடைதலையும் விபரிக்கிறது. ''மனந்திரும்புதல்'' என்பது ஓர் உணர்ச்சி வசப்படும் அனுபவம் மட்டுமல்ல, அது மனதில் ஏற்படும் ஒரு மாற்றமும் ஆகும். மனந்திரும்புகிற ஒருவன் பரிசுத்த வேதாகமத்தின் சத்தியங்களைச் சரியான முறையில் தெரிந்து கொள்வதற்கான ஒரு புதிய தெளிவைப் பெறுகிறான். இந்தப் புதிய தெளிவைப் பெறுகிறவர்கள் பரிசுத்தமாக வாழ வேண்டும் என்று உறுதியாகத் தீர்மானிக்கிறார்கள். அப்படி மனந்திரும்பு கிறவர்களுக்கு பாவப் பழக்கங்களிலிருந்து ஆண்டவரின் வல்லமையால் விடுதலை கிடைக்கிறது.

## ஞானஸ்நானம் என்றால் என்ன?

கிறிஸ்தவ உலகில் ''ஞானஸ்நானம்'' என்ற வார்த்தை அநேகமாய் பயன் படுத்துவதை நீங்கள் கேள்விப்பட்டிருக்கலாம். ''நான் ஞானஸ்நானம் எடுத்திருக்கிறேன், நீங்கள் ஞானஸ்நானம் எடுத்திருக்கிறீர்களா?'' என்று பல விசுவாசிகள் தமக்குள் பேசிக்கொள்வதை கேட்டிருக்கலாம். மேலும் 7 ஞானஸ்நானம் என்ற வார்த்தை பரிசுத்த வேதாகமத்தில் புதிய ஏற்பாட்டுப் பகுதியில் அடிக்கடி பயன் படுத்தப்பட்டிருக்கிறதையும் நீங்கள் காணலாம்.

ஞானஸ்நானம் அல்லது திருமுழுக்கு என்பது ஒரு அடையாளச் செய்கையாகும், ஓர் உள்ளான பொருளை அல்லது கருத்தை வெளிப்படையாகத் தெரியப்படுத்தும் ஒரு செயலாக அமைகிறது.

2000 ஆண்டுகளுக்கு முன் ஆண்டவராகிய இயேசு கிற்ஸ்துவுக்கு முன்னோடியாக வந்த யோவான் என்பவர் மனந்திரும்பினவர்களுக்கு ஞானஸ்நானம் கொடுத்தார். இவர் ஞானஸ்நானம் கொடுத்ததினால் அவர் ''யோவான் ஸ்நானகன்'' என்று அழைக்கப்பட்டார். ஆண்டவராகிய இயேசு கிறிஸ்து முப்பது (30) வயதானபோது யோர்தான் நதியில் யோவான் ஸ்நானகனிடம் ஞானஸ்நானம் பெற்றார்.

''அப்பொழுது யோவானால் ஞானஸ்நானம் பெறுவதற்கு இயேசு கலிலேயாவைவிட்டு யோர்தானுக்கு அருகே அவனிடத்தில் வந்தார். யோவான் அவருக்குத் தடை செய்து: நான் உம்மாலே ஞானஸ்நானம் பெறவேண்டியதாயிருக்க, நீர் என்னிடத்தில் வரலாமா என்றான். இயேசு அவனுக்குப் பிரதியுத்தரமாக: இப்பொழுது இடங்கொடு, இப்படி எல்லா நீதியையும் நிறைவேற்றுவது நமக்கு ஏற்றதாயிருக்கிறது என்றார். அப்பொழுது அவருக்கு இடங்கொடுத்தான். இயேசு ஞானஸ்நானம் பெற்று, ஜலத்திலிருந்து கரையேறினவுடனே, இதோ, வானம் அவருக்குத் திறக்கப்பட்டது, தேவ ஆவி புறாவைப்போல இறங்கி, தம்மேல் வருகிறதைக் கண்டார். அன்றியும், வானத்திலிருந்து ஒரு சத்தம் உண்டாகி: இவர் என்னுடைய நேசகுமாரன், இவரில் பிரியமாயிருக்கிறேன் என்று உரைத்தது.''– மத். 3: 13–17

''ஜனங்களெல்லாரும் ஞானஸ்நானம் பெற்றபோது, இயேசுவும் ஞானஸ்நானம் பெற்று, ஜெபம்பண்ணுகையில், வானம் திறக்கப்பட்டது, பரிசுத்த ஆவியானவர் ரூபங்கொண்டு புறாவைப்போல அவர்மேல் இறங்கினார். வானத்திலிருந்து ஒரு சத்தமும் உண்டாகி: நீர் என்னுடைய நேசகுமாரன், உம்மில் பிரியமாயிருக்கிறேன் என்று உரைத்தது.''– லூக்கா 3: 21–22

ஆண்டவராகிய இயேசு கிறிஸ்து, தாம் ஞானஸ்நானம் எடுத்ததும் அல்லாமல், அவர் மரித்து உயித்த்தெழுந்த பின்னர், பரத்திற்கு ஏறிச்செல்லுவதற்கு முன்னர் கொடுத்த கடைசிக் கட்டளையில் ஞானஸ்நானம் என்பது அதி முக்கிய இடத்தைப் பெறுகிறதைக் காணலாம்.

கிறிஸ்தவ திருச்சபை தோன்றிய காலத்தில் ஆண்டவராகிய இயேசு கிறிஸ்துவை விசுவாசித்து பின்பற்றினவர்கள் ஞானஸ்நானம் பெற்றார்கள். அவ்வாறு மக்கள் ஞானஸ்நானம் பெறும்போது ஆண்டவராகிய இயேசு கிறிஸ்துவின் ஊழியக்காரர், 8

ஆண்டவராகிய இயேசு கிறிஸ்துவைத் தம் சொந்த இரட்சகராக ஏற்றுக்கொண்ட விசுவாசிகளை தண்ணீரில் முழுக்கி ஆண்டவராகிய இயேசு கிறிஸ்துவின் கடைசிக் கட்டளைப்படி ‘‘பிதா குமாரன் பரிசுத்த ஆவியின் நாமத்தில் இவருக்கு ஞானஸ்நானம் கொடுக்கிறேன்’’ என்று பகிரங்கமாய் அறிவிக்கிறார். இந்த அடையாளச் செயலைத்தான் ‘‘ஞானஸ்நானம்’’ என்று கூறுகிறோம். ஆண்டவராகிய இயேசு கிறிஸ்துவை ஏற்றுக்கொண்ட ஒருவர் ஆண்டவராகிய இயேசுவின் போதனைகளைக் கற்றுக்கொண்டு, அதைப் பின்பற்றுவதில் ஞானஸ்நானம் ஒரு முக்கிய படியாகும்.

‘‘பதினொரு சீஷர்களும், கலிலேயாவிலே இயேசு தங்களுக்குக் குறித்திருந்த மலைக்குப் போனார்கள். அங்கே அவர்கள் அவரைக் கண்டு, பணிந்துகொண்டார்கள், சிலரோ சந்தேகப்பட்டார்கள். அப்பொழுது இயேசு சமீபத்தில் வந்து, அவர்களை நோக்கி: வானத்திலும் பூமியிலும் சகல அதிகாரமும் எனக்குக் கொடுக்கப்பட்டிருக்கிறது. ஆகையால், நீங்கள் புறப்பட்டுப்போய், சகல ஜாதிகளையும் சீஷராக்கி, பிதா குமாரன் பரிசுத்த ஆவியின் நாமத்திலே அவர்களுக்கு ஞானஸ்நானங்கொடுத்து, நான் உங்களுக்குக் கட்டளையிட்டயாவையும் அவர்கள் கைக்கொள்ளும்படி அவர்களுக்கு உபதேசம்பண்ணுங்கள். இதோ, உலகத்தின் முடிவுபரியந்தம் சகல நாட்களிலும் நான் உங்களுடனேகூட இருக்கிறேன் என்றார். ஆமென்.’’– மத் 28: 16–20

## ‘‘ஞானஸ்நானம்’’ என்னும் அடையாளச் செய்கை வெளிப்படுத்தும் கருத்து

ஆண்டவராகி இயேசு கிறிஸ்து நம்முடைய பாவங்களுக்காக சிலுவையில் பாடுபட்டு, இரத்தம் சிந்தி மரித்தார், மூன்றாம் நாள் உயிருடன் எழும்பினார். இதை நாம் விசுவாசிக்கிறோம். கிறிஸ்து நமக்காக மரித்தார் என்ற உண்மையோடுகூட நாமும் கிறிஸ்துவோடுகூட மரித்தோம் என்ற உண்மையையும் வேதம் போதிக்கிறது. இதைத்தான் அப்போஸ்தலனாகிய பவுல் கலாத்தியருக்கு எழுதிய நிருபத்தில் குறிப்பிட்டிருப்பதைக் காணலாம்:

‘‘கிறிஸ்துவுடனேகூடச் சிலுவையிலறையப்பட்டேன், ஆயினும், பிழைத்திருக்கிறேன், இனி நான் அல்ல, கிறிஸ்துவே எனக்குள் பிழைத்திருக்கிறார், நான் இப்பொழுது மாம்சத்தில் பிழைத்திருக்கிறதோ, என்னில் அன்புகூர்ந்து எனக்காகத் தம்மைத்தாமே ஒப்புக்கொடுத்த தேவனுடைய குமாரனைப்பற்றும் விசவாசத்தினாலே பிழைத்திருக்கிறேன்.’’– கலா. 2: 20

நாம் நமது பாவங்களுக்காக மரிக்க முடியாது, கிறிஸ்துதாமே நம்முடைய பாவங்களுக்காக மரித்தார். ஆகவே, நாம் நம்முடைய பாவங்களுக்கு மரிக்க 9

வேண்டும், பாவத்தை விட்டு, பாவத்தினால் பாதிக்கப்படாதபடி பிரிந்திருக்க வேண்டும். கிறிஸ்துவோடுகூட நான் மரித்தேன் என்ற ஆவிக்குரிய உண்மையை விசுவாசிக்கும்போது, பாவத்திற்கு மரிக்கும் அனுபவத்தை நாம் பெற முடிகின்றது. இது ஏதோ ஒரேநாளில் கிடைத்து, அதோடு முடிந்துவிடும் அனுபவம் அல்ல, ஒவ்வொரு முறையும் நாம் பாவம் செய்யத் தூண்டப்படும்போது கிறிஸ்துவொடுகூட மரித்தேன் என்ற உண்மையை நினைவுபடுத்தி அதைப் பற்றிக்கொள்ளும்போது, பரிசுத்த வாழ்க்கைக்கான பெலனும், பாவத்தின்மீது வெற்றியும் நமக்குக் கிடைக்கின்றது. அப்போது கிறிஸ்துவோடுகூட மரித்தேன், கிறிஸ்துவோடுகூட அடக்கப் பண்ணப்பட்டேன், கிறிஸ்துவோடுகூட உயிரோடு எழும்பினேன் என்பவைகளாகிய முக்கியமான ஆவிக்குரிய உண்மைகளை, ‘‘ஞானஸ்நானம்’’ என்ற அடையாளச் செய்கையின் மூலம் வெளிப்படுத்துகிறோம்.

‘‘தேவனோ இரக்கத்தில் ஐசுவரியமுள்ளவராய் நம்மில் அன்புகூர்ந்த தம்முடைய மிகுந்த அன்பினாலே, அக்கிரமங்களில் மரித்தவர்களாயிருந்த நம்மைக் கிறிஸ்துவுடனேகூட உயிர்ப்பித்தார், கிருபையினாலே இரட்சிக்கப்பட்டீர்கள்’’– எபே. 2: 4–5

‘‘ஞானஸ்நானத்தில் அவரோடேகூட அடக்கம் பண்ணப்பட்டவர்களாகவும், அதிலே அவரை மரித்தோரிலிருந்தெழுப்பின தேவனுடைய செயலின் மேலுள்ள விசுவாசத்தினாலே அவரோடேகூட எழுந்தவர்களாகவும் இருக்கிறீர்கள்.’’– கொலோ. 2: 12

ஞானஸ்நானம் என்ற அடையாளச் செய்கை நாம் விசுவாசிக்கும் ஆவிக்குரிய மேலான உண்மைகளையும், ஆழமான கிறிஸ்தவ அனுபவத்தையும் வெளிப்புடுத்துகிறது. எனவே நீங்கள் ஞானஸ்நானம் பெறாமல் இருக்கலாமா? சீக்கிரத்தில் ஞானஸ்நானம் எடுத்துக் கொள்ளுங்கள். ஒருவேளை ஞானஸ்நானம் பெற்றவர்களாய் இருப்பின் மேலே சொல்லப்பட்ட கருத்துக்களை அடிக்கடி சிந்தித்துப் பார்க்க வேண்டும்.

## ஞானஸ்நானம் ஏன் எடுக்க வேண்டும்?

1. சத்தியத்தின் அடிப்படை
2. தேவ கட்டளை
3. தேவனோடு உடன்படிக்கை
4. பகிரங்க அறிக்கை

## 1. சத்தியத்தின் அடிப்படை

,,ஞானஸ்நானம்’’ என்பது புதிய ஏற்பாட்டில் நாம் படிக்கும் ஒரு முக்கிய உபதேசமாகும். புதிய ஏற்பாட்டின் சுவிசேஷங்களின் ஆரம்பத்தில் யோவான் ஸ்நானகன் என்பவரைப் பற்றி வாசிக்கிறோம். இவர் ஆண்டவராகிய இயேசு கிறிஸ்துவுக்கு முன்னோடியாக வந்தவர், இயேசு கிறிஸ்துவுவை அறிமுகப்படுத்தினவர், இவர் மனந்திரும்புதலைக் குறித்தும் பிரசிங்கத்தவர். ,,ஞானஸ்நானம்’’ தேவனால் உண்டான தேவ நீதி, இது ஒரு

புதிய கொள்கையோ சடங்காச்சாரமோ அல்ல. மனந்திரம்புதலும் அதற்கு அமைய ஒருவருடைய வாழ்க்கையில் குணமாற்றம் காணப்படவேண்டும். அதைத் தொடர்ந்து மனந்திரம்புதலுக்கேற்ற ஞானஸ்நானத்தைப் பெற்றுக்கொள்ள வேண்டும்.

ஆண்டவராகிய இயேசு கிறிஸ்து பாவமற்ற பரிசுத்தராய் இருந்தும், தேவ நீதியை நிறைவேற்றுவதற்காக யோவான் ஸ்நாகனிடத்தில் யோர்தான் நதியில் ஞானஸ்நானம் பெற்றார், அப்பொழுது பரிசுத்த ஆவியானவர் புறாவைப்போல் அவர்மேல் இறங்கினார். ''இவர் என்னுடைய நேசகுமாரன், இவரில் பிரியமாயிருக்கிறேன்'' என்ற சத்தத்தின் மூலமாக பிதாவானவர் தம்முடைய குமாரனை மகிமைப்படுத்தினார்.

''இயேசு அவனுக்குப் பிரதியுத்தரமாக: இப்பொழுது இடங்கொடு, இப்படி எல்லா நீதியையும் நிறைவேற்றுவது நமக்கு ஏற்றதாயிருக்கிறது என்றார். அப்பொழுது அவருக்கு இடங்கொடுத்தான். இயேசு ஞானஸ்நானம் பெற்று, ஜலத்திலிருந்து கரையேறினவுடனே, இதோ, வானம் அவருக்குத் திறக்கப்பட்டது, தேவ ஆவி புறாவைப்போல இறங்கி, தம்மேல் வருகிறதைக் கண்டார். அன்றியும், வானத்திலிருந்து ஒரு சத்தம் உண்டாகி: இவர் என்னுடைய நேசகுமாரன், இவரில் பிரியமாயிருக்கிறேன் என்று உரைத்தது.''– மத்தே. 3: 15–17

மேலும்ஆண்டவராகிய இயேசு கிறிஸ்து மரித்து உயிர்த்தெழுந்து பரமேறிச் செல்வதற்கு முன் தம்முடைய சீடர்களுக்குக் கொடுத்த கடைசிச் கட்டளையாவது:

''ஆகையால், நீங்கள் புறப்பட்டுப்போய், சகல ஜாதிகளையும் சீஷராக்கி, பிதா குமாரன் பரிசுத்த ஆவியின் நாமத்திலே அவர்களுக்கு ஞானஸ்நானங்கொடுத்து, நான் உங்களுக்குக் கட்டளையிட்டயாவையும் அவர்கள் கைக்கொள்ளும்படி அவர்களுக்கு உபதேசம்பண்ணுங்கள். இதோ, உலகத்தின் முடிவுபரியந்தம் சகல நாட்களிலும் நான் உங்களுடனேகூட இருக்கிறேன் என்றார். ஆமென்.''– மத்தே. 28: 19–20 11

ஆண்டவராகிய இயேசு கிறிஸ்துவின் அப்போஸ்தலரும், ஆதி விசுவாசிகளும் இயேசு கிறிஸ்துவை பிரசங்கித்தார்கள், அதைக் கேட்டு விசுவாசித்தவர்களுக்கு ஞானஸ்நானம் கொடுத்தார்கள் என்பதை அப்போஸ்தலர் நடபடிகள் புத்தகத்தில் காணக்கூடியதாய் இருக்கிறது. நீங்களும் ஆண்டவராகிய இயேசு கிறிஸ்துவை விசுவாசித்து மனந்திரும்பியிருப்பீர்கள் என்றால் அவசியம் ஞானஸ்நானம் பெறுதல் வேண்டும். ஞானஸ்நானம் என்பது ஆண்டவர் நமக்குக் கொடுத்திருக்கும் போதனைகளில் அடிப்படையானது என்பதை நாம் அறிய வேண்டும்.

## 2. தேவ கட்டளை

மனந்திரும்ப வேண்டும் என்பது தேவனால் கொடுக்கப்பட்ட ஒரு கட்டளையாகும். அதைப் போலவே ஞானஸ்நானம் எடுப்பதும் ஒரு கட்டளையாகவே கொடுக்கப்பட்டிருக்கிறது. ஆதி திருச்சபையின் சரித்திரத்தில் அப்போஸ்தலனாகிய பேதுரு ஆண்டவராகிய இயேசு கிறிஸ்துவைப் பற்றி வல்லமையாகப் பிரசங்கித்தார். அதைக் கேட்ட மக்கள், இருதயத்தில் குத்துண்டவர்களாகி பேதுருவையும் மற்ற அப்போலஸ்தரையும் பார்த்து ''சகோதரரே நாங்கள் என்ன செய்ய வேண்டும்?'' என்றார்கள். பேதுரு அவர்களை நோக்கி நீங்கள் மனந்திரும்பி, ஒவ்வொருவரும் பாவமன்னிப்புக்கென்று இயேசுகிறிஸ்துவின் நாமத்தினாலே ஞானஸ்நானம் பெற்றுக்கொள்ளுங்கள், அப்பொழுது பரிசுத்தஆவியின் வரத்தைப் பெறுவீர்கள் என்று கூறினான்.

''ஆகையால், நீங்கள் சிலுவையில் அறைந்த இந்த இயேசுவையே தேவன் ஆண்டவரும் கிறிஸ்துவுமாக்கினாரென்று இஸ்ரவேல் குடும்பத்தார் யாவரும் நிச்சயமாய் அறியக்கடவர்கள் என்றான். இதை அவர்கள் கேட்டபொழுது, இருதயத்திலே குத்தப்பட்டவர்களாகி, பேதுருவையும் மற்ற அப்போஸ்தலரையும் பார்த்து: சகோதரரே, நாங்கள் என்னசெய்யவேண்டும் என்றார்கள். பேதுரு அவர்களை நோக்கி: நீங்கள் மனந்திரும்பி, ஒவ்வொருவரும் பாவமன்னிப்புக்கென்று இயேசுகிறிஸ்துவின் நாமத்தினாலே ஞானஸ்நானம் பெற்றுக்கொள்ளுங்கள், அப்பொழுது பரிசுத்தஆவியின் வரத்தைப் பெறுவீர்கள். வாக்குத்தத்தமானது உங்களுக்கும், உங்கள் பிள்ளைகளுக்கும் நம்முடைய தேவனாகிய கர்த்தர் வரவழைக்கும் தூரத்திலுள்ள யாவருக்கும் உண்டாயிருக்கிறது என்று சொல்லி, இன்னும் அநேக வார்த்தைகளாலும் சாட்சிகூறி, மாறுபாடுள்ள இந்த சந்ததியை விட்டு விலகி உங்களை இரட்சித்துக்கொள்ளுங்கள் என்றும் புத்திசொன்னான். அவனுடைய வார்த்தையைச் சந்தோஷமாய் ஏற்றுக்கொண்டவர்கள் ஞானஸ்நானம் பெற்றார்கள். அன்றையத்தினம் ஏறக்குறைய மூவாயிரம்பேர் சேர்த்துக்கொள்ளப்பட்டார்கள்.''– அப்போ. 2: 36–41 12

ஆண்டவராகிய இயேசு கிறிஸ்து உயிர்த்தெழுந்த பின் பரலோகத்துக்கு எடுத்துக்கொள்ளப்பட்டுப் போவதற்கு முன் தம்முடைய சீஷர்களுக்குக் கூறிய முக்கிய வார்த்தைகளில் ஞானஸ்நானத்தைப் பற்றிக் குறிப்பிட்டுள்ளார்.

''பதினொரு சீஷர்களும், கலிலேயாவிலே இயேசு தங்களுக்குக் குறித்திருந்த மலைக்குப் போனார்கள். அங்கே அவர்கள் அவரைக் கண்டு, பணிந்துகொண்டார்கள், சிலரோ சந்தேகப்பட்டார்கள். அப்பொழுது இயேசு சமீபத்தில் வந்து, அவர்களை நோக்கி: வானத்திலும் பூமியிலும் சகல அதிகாரமும் எனக்குக் கொடுக்கப்பட்டிருக்கிறது. ஆகையால், நீங்கள் புறப்பட்டுப்போய், சகல ஜாதிகளையும் சீஷராக்கி, பிதா குமாரன் பரிசுத்த ஆவியின் நாமத்திலே அவர்களுக்கு ஞானஸ்நானங்கொடுத்து, நான் உங்களுக்குக் கட்டளையிட்டயாவையும் அவர்கள் கைக்கொள்ளும்படி அவர்களுக்கு உபதேசம்பண்ணுங்கள். இதோ, உலகத்தின் முடிவுபரியந்தம் சகல நாட்களிலும் நான் உங்களுடனேகூட இருக்கிறேன் என்றார். ஆமென்.''– மத்தே. 28: 16–20

''பின்பு, அவர் அவர்களை நோக்கி: நீங்கள் உலகமெங்கும் போய், சர்வ சிருஷ்டிக்கும் சுவிசேஷத்தைப் பிரசங்கியுங்கள். விசுவாசமுள்ளவனாகி ஞானஸ்நானம் பெற்றவன் இரட்சிக்கப்படுவான், விசுவாசியாதவனோ ஆக்கினைக்குள்ளாகத் தீர்க்கப்படுவான். விசுவாசிக்கிறவர்களால் நடக்கும் அடையாளங்களாவன: என் நாமத்தினாலே பிசாசுகளைத் துரத்துவார்கள், நவமான பாஷைகளைப் பேசுவார்கள், சர்ப்பங்களை எடுப்பார்கள், சாவுக்கேதுவான யாதொன்றைக் குடித்தாலும் அது அவர்களைச் சேதப்படுத்தாது, வியாதிஸ்தர்மேல் கைகளை வைப்பார்கள், அப்பொழுது அவர்கள் சொஸ்தமாவார்கள் என்றார். இவ்விதமாய்க் கர்த்தர் அவர்களுடனே பேசினபின்பு, பரலோகத்துக்கு எடுத்துக்கொள்ளப்பட்டு, தேவனுடைய வலதுபாரிசத்தில்

உட்கார்ந்தார். அவர்கள் புறப்பட்டுப்போய், எங்கும் பிரசங்கம்பண்ணினார்கள். கர்த்தர் அவர்களுடனேகூடக் கிரியையை நடப்பித்து, அவர்களால் நடந்த அடையாளங்களினாலே வசனத்தை உறுதிப்படுத்தினார். ஆமென்.''– மாற்கு 16: 15–20

ஞானஸ்நானம் எடுக்க வேண்டும் என்ற கட்டளைக்கு நாம் கீப்படிய வேண்டும். ''கீழ்ப்படிதலே புதிய ஆசீர்வாதங்களுக்கு அடிப்படையாக இருக்கிறது. 13

### 3. உடன்படிக்கை

''உடன்படிக்கை'' என்பது வேதாகமத்திலுள்ள ஒரு முக்கியமான வார்தையாகும். இரு தரப்பினருக்கிடையே ஒரு பொது நோக்கத்திற்காக ஏற்படக்கூடிய உடன்பாடு அல்லது ஒப்பந்தம் என்பதைப்பற்றி நாம் அறிவோம். இதைப் போலவே கடவுளுக்கும் மனிதனுக்குமிடையே தேவன் செய்திருக்கும் பல உடன்படிக்கைகளைப் பற்றி வேதாகமத்தில் படிக்கிறோம்.

''அதற்கு ஒப்பனையான ஞானஸ்நானமானது, மாம்ச அழுக்கை நீக்குதலாயிராமல், தேவனைப்பற்றும் நல்மனச்சாட்சியின் உடன்படிக்கையாயிருந்து, இப்பொழுது நம்மையும் இயேசுகிறிஸ்துவினுடைய உயிர்த்தெழுதலினால் இரட்சிக்கிறது,''– 1 பேதுரு 3: 21

ஞானஸ்நானம் என்பது மனிதன் தேவனோடு செய்யும் ஓர் உடன்படிக்கையாகும். ஒரு விசுவாசி ''நான் என்றென்றும் ஆண்டவராகிய இயேச கிறிஸ்துவையே பின்பற்றுவேன்'' என்பதற்கு அடையாளமாக எடுக்கும் ஞானஸ்நானம் "நல் மனச்சாட்சியின் உடன்படிக்கை" என்று அழைக்கப்படுகிறது.

''மறக்கப்படாத நித்திய உடன்படிக்கையினால் நாம் கர்த்தரைச் சேர்ந்துகொள்வோம் வாருங்கள்'' என்ற தெளிவான அழைப்பை எரேமியா 50: 5 வசனத்தில் வாசிக்கிறோம்

நீங்களும் இயேசுவுடன் உடன்படிக்கை செய்ய அழைக்கப்படுகிறீர்கள். ஆண்டவரோடு நான் உடன்படிக்கை செய்கிறேன் என்ற உணர்வோடு ஞானஸ்நானம் பெறுவதற்கு நீங்கள் தீர்மானிப்பிர்களா?

### 4. அறிக்கை

ஆண்டவராகிய இயேசு கிறிஸ்துவை விசுவாசித்து, அவரைத் தம் சொந்த இரட்சகராக ஏற்றுக்கோண்டவர்கள் ஞானஸ்நானம் எடுக்கும்போது ''நான் கிறிஸ்தவன், அதாவது கிறிஸ்துவுக்கு உரியவன், கிறிஸ்துவை உடையவன்'' என்று தெரிவிக்கின்றனர்.

கிறிஸ்து இல்லாத பழைய வாழ்க்கையிலிருந்து ஒருவர் மனந்திரும்பும்போது, கிறிஸ்துவுக்குள்ளாக இருக்கும் ஓர் புதிய வாழ்க்கையை ஆரம்பிக்கிறார். அவர் 14

ஞானஸ்நானம் பெறும்போது ''கிறிஸ்துவோடுகூட மரித்தேன், கிறிஸ்துவோடுகூட எழும்பியிருக்கிறேன்'' என்ற ஆவிக்குரிய உண்மைகளை ''ஞானஸ்நானம்'' என்ற செயலின் மூலம் வெளிப்படுத்துகிறார்.

''ஏனெனில், உங்களில் கிறிஸ்துவுக்குள்ளாக ஞானஸ்நானம் பெற்றவர்கள் எத்தனைபேரோ, அத்தனைபேரும் கிறிஸ்துவைத் தரித்துக்கொண்டீர்களே.''– கலாத்தியர் 3: 27

1. உண்மைக் கிறிஸ்தவர்கள் இரகசிகக் கிறிஸ்தவர்களாகத் தம்மளவில் இருக்கமுடியாது. வாழ்க்கையே கிறிஸ்துவைப்பற்றிய அறிக்கையாக அல்லது சாட்சியாக மாற வேண்டும்.
2. ஆண்டவராகிய இயேசு கிறிஸ்துவைப் பற்றி மற்றவர்களிடம் சொல்லுவதைப் பற்றி வெட்கம் அடையக் கூடாது.
3. கிறிஸ்துவோடு இணைந்திருக்கிறேன் என்பதை எடுத்துக்காட்டும் ஞானஸ்நானமாகிய கட்டளைக்கு கீழ்ப்படிவதற்குத் தயக்கம் இருக்கக்கூடது.

ஞானஸ்நானம் ஆலயங்களிலோ அல்லது பொது இடங்களிலோ கொடுக்கிறார்கள். கிறிஸ்தவர்கள் அல்லாதவர்கள் முன்னிலையில் ஒருவர் அதைப் பெறும்போது தான் இனி கிறிஸ்தவனாகவே இருப்பேன் என்று சாட்சியாகச் சொல்லும் ஒரு வெளிப்படை செயலாக அமைகிறது.

கிறிஸ்தவ சபையார் முன்னிலையில் இந்தச் செய்கை அவர் ஏனைய கிறிஸ்தவாகளோடு தன்னை இணைக்கிறதையும், கிறிஸ்துவின் திருச்சபையில் இணைந்து கொள்கிறார் என்பதையும் அதிகாரப் பூர்வமாகக் காட்டுகிறது.

## ஞானஸ்நானம் எப்பொழுது எடுக்க வேண்டும்?

ஆண்டவராகிய இயேசு கிறிஸ்துவைச் சொந்த இரட்சகராக ஏற்றுக்கொண்டு மனந்திரும்பிய பின்னரே ஞானஸ்நானம் எடுக்கவேண்டும். ''விசுவாசமுள்ளவனாகி ஞானஸ்நானம் பெற்றவன் இரட்சிக்கப்படுவான்'' என்பதை பரிசுத்த வேதாகமத்தில் மாற்கு– 16: 16 வசனத்தில் பார்க்கிறோம்.

கிறிஸ்தவ குடும்பத்தில் பிறந்தவர்களாக இருந்தாலும், கிறிஸ்தவரல்லாத குடும்பத்தில் பிறந்து கிறிஸ்துவை ஏற்றுக் கொண்டவர்களாக இருந்தாலும்; பாவ மன்னிப்பின் நிச்சயம் பெற்ற பின்னரே ஞானஸ்நானம் எடுக்கவேண்டும். 15

குழந்தைகளுக்கு ஞானஸ்நானம் கொடுப்பதற்கான ஆதாரம் வேதாகமத்தில் எங்கும் கூறப்படவில்லை. பரிசுத்த வேதாகமம் போதிக்கும் வசனப்படிதான் நாம் நடக்கவேண்டும். விபரமறியாத குழந்தைகளுக்கு விளங்கக்கூடிய ஆற்றல் இல்லாததால் அவர்களால் விசுவாசிக்கவோ, அறிக்கை செய்யவோ முடியாது. அப்படிப்பட்ட நிலையில் குழந்தைகளுக்கு ஞானஸ்நானம் கொடுப்பது சத்தியத்திற்கு முரணானதாய் இருக்கிறது. ஆனால் குழந்தைகளை கிறிஸ்தவ அறிவில் வளர்க்கவேண்டும் என்னும் உயரிய நோக்கத்தோடு சபையார் முன்னிலையில் குழந்தைகளை பிரதிஷ்டை செய்வதும், கர்த்தரிடத்தில் ஒப்புவிப்பதும் முறைமையானது. இந்த முறைமையின்படியே இயேசுவையும் குழந்தையாக தேவாலயத்திற்குக் கொண்டுபோய் கர்த்தருக்கென்று ஒப்புக்கொடுத்தனர்.

“முதற்பேறான எந்த ஆண்பிள்ளையும் கர்த்தருக்குப் பரிசுத்தமானதென்னப்படும் என்று கர்த்தருடைய நியாயப்பிரமாணத்தில் எழுதியிருக்கிறபடி அவரைக் கர்த்தருக்கென்று ஒப்புக்கொடுக்கவும், கர்த்தருடைய நியாயப்பிரமாணத்தில் சொல்லியிருக்கிறபடி, ஒரு ஜோடு காட்டுப்புறாவையாவது இரண்டு புறாக்குஞ்சுகளையாவது பலியாகச் செலுத்தவும், அவரை (இயேசுவை) எருசலேமுக்குக் கொண்டுபோனார்கள்.”– லூக். 2: 23–24
ஞானஸ்நானத்தைப் பற்றிய வேதாகமப் போதனைகளைச் சரிவர கற்றுத் தெரிந்து ஞானஸ்நானம் எடுப்பதே சிறந்தது.
ஒருவர் மனந்திரும்பி, இயேசு கிறிஸ்துவை தன்னுடைய சொந்த இரட்சகராக ஏற்றுக்கொண்டு, அவரை தனிப்பட்ட முறையில் விசுவாசித்த பிறகே ஞானஸ்நானம் பெற வேண்டும். மற்றவர்களுடைய நிற்பந்தத்திற்காகவோ, கட்டாயப்படுத்துதலுக்காகவோ ஞானஸ்நானம் எடுக்கக்கூடாது.
சத்தியம் விடுதலையாக்கும்
எத்தியோப்பியா நாட்டைச் சோந்த மந்திரிக்கு பிலிப்பு என்பவர் ஆண்டவராகிய இயேசு கிறிஸ்துவைக் குறித்து பிரசங்கித்தார். தேவ வார்த்தைகளைச் சரிவரப் புரிந்தபோது, அவர்கள் வழிநடந்துபோகையில், தண்ணீருள்ள ஓரிடத்திற்கு வந்தார்கள். அப்பொழுது மந்திரி: இதோ, தண்ணீர் இருக்கிறதே, நான் ஞானஸ்நானம் பெறுகிறதற்குத் தடையென்ன என்றான். அதற்குப் பிலிப்பு: நீர் முழு இருதயத்தோடும் விசுவாசித்தால் தடையில்லையென்றான். அப்பொழுது அவன்: இயேசுகிறிஸ்துவைத் தேவனுடைய குமாரனென்று விசுவாசிக்கிறேன் என்று சொல்லி, இரதத்தை நிறுத்தச்சொன்னான். அப்பொழுது பிலிப்பும் மந்திரியும் ஆகிய இருவரும் தண்ணீரில் இறங்கினார்கள், பிலிப்பு அவனுக்கு ஞானஸ்நானங்கொடுத்தான். ( அப்போ. 8: 26–38 ) 16
“சத்தியத்தையும் அறிவீர்கள், சத்தியம் உங்களை விடுதலையாக்கும் என்றார்.”– யோவான் 8: 32

## ஞானஸ்நானம் எப்படி எடுக்க வேண்டும் ?

ஞானஸ்நானம் என்ற வார்த்தையின் பொருளைக் குறித்து விளக்கும்போது தண்ணீரில் மூழ்கி ஞானஸ்நானம் பெறுவதே பரிசுத்த வேதாகமப் போதனையின் சரியான முறை என்பதைப் பார்த்தோம். தண்ணீரில் மூழ்குவது கிறிஸ்துவோடுகூட அடக்கம் பண்ணப்பட்டதற்கும், எழும்புவது கிறிஸ்துவோடுகூட உயிரோடு எழும்பினதற்கும் அடையாளமாக இருக்கிறது என்பதை மீண்டும் நினைவு படுத்துகிறோம்.

“கிறிஸ்து இயேசுவுக்குள்ளாக ஞானஸ்நானம் பெற்ற நாமனைவரும் அவருடைய மரணத்துக்குள்ளாக ஞானஸ்நானம் பெற்றதை அறியாமலிருக்கிறீர்களா? மேலும் பிதாவின் மகிமையினாலே கிறிஸ்து மரித்தோரிலிருந்து எழுப்பப்பட்டதுபோல, நாமும் புதிதான ஜீவனுள்ளவர்களாய் நடந்துகொள்ளும்படிக்கு, அவருடைய மரணத்திற்குள்ளாக்கும் ஞானஸ்நானத்தினாலே கிறிஸ்துவுடனேகூட அடக்கம்பண்ணப்பட்டோம். ஆதலால் அவருடைய மரணத்தின் சாயலில் நாம் இணைக்கப்பட்டவர்களானால், அவர் உயிர்த்தெழுதலின் சாயலிலும் இணைக்கப்பட்டிருப்போம்.”– ரோமர்: 6: 3–5

“ஞானஸ்நானத்தில் அவரோடேகூட அடக்கம்பண்ணப்பட்டவர்களாகவும், அதிலே அவரை மரித்தோரிலிருந்தெழுப்பின தேவனுடைய செயலின் மேலுள்ள விசுவாசத்தினாலே அவரோடேகூட எழுந்தவர்களாகவும் இருக்கிறீர்கள்.”– கொலோ.2: 12

### இயேசுவின் கட்டளை

சில சபையினர் இயேசுவின் நாமத்தில் (மட்டும்) ஞானஸ்நானம் கொடுக்கின்றனர். ஆனால் ஆண்டவராகிய இயேசு பரலோகத்துக்கு எடுத்துக்கொள்ளப்பட்டுப் போவதற்கு முன் தமது சீஷர்களை நோக்கி: வானத்திலும் பூமியிலும் சகல அதிகாரமும் எனக்குக் கொடுக்கப்பட்டிருக்கிறது. ஆகையால், நீங்கள் புறப்பட்டுப்போய், சகல ஜாதிகளையும் சீஷராக்கி, பிதா குமாரன் பரிசுத்த ஆவியின் நாமத்திலே அவர்களுக்கு ஞானஸ்நானங்கொடுக்கும்படி கட்டளையிட்டார். 17
நாம் திரியேக தேவனை விசுவாசிக்கிறவர்களாய் இருப்பதால் மத்தேயு 28: 19ம் வசனத்தில் கூறப்பட்டபடி பிதா குமாரன் பரிசுத்த ஆவியானவரின் நாமத்தினால் ஞானஸ்நானம் பெறுதல் வேண்டும்.

### ஞானஸ்நானம் யாரித்தில், எங்கே எடுக்க வேண்டும்?

அனேகர் தாம் யாரிடத்தில் ஞானஸ்நானம் பெற வேண்டும் என்று கேட்பதுண்டு. பல சபைப் பிரிவினரும் தங்கள் சபையில் ஒருவரைச் சேர்த்துக் கொள்வதற்காக அவரைச் சில சமயம் கட்டாயப்படுத்தலாம், அல்லது அவரைக் குழப்பலாம். ஆனால் ஒருவரது ஆவிக்குரிய நலனில் கரிசனைகொண்டு அவரைக் கண்காணித்து வரும் சபை ஊழியரிடம் ஞானஸ்நானம் பெறுவதே ஒழுங்கும் சிறந்ததுமாகும். மேலும் வேதாக அடிப்படையில் இயங்கும் ஆவிக்குரிய சபையில் ஞானஸ்நானம் பெற்று அச்சபை விசுவாசிகளோடு இணைந்து வளர்வது அவசியம், ஞானஸ்நானம் எடுக்கும்போது நீங்கள் கர்த்தருக்கும் வேத சத்திய நியமங்களுக்கும் கீழ்ப்படிகிறீர்கள் இரட்சிக்கப்பட்டு சரியான முறையில் ஞானஸநானம் பெற்றவாகள் மீண்டும் ஞானஸ்நானம் பெற அவசியமில்லை. ஒரே முறை ஞானஸ்நானம் பெற்றால்போதும.

“உங்களுக்கு உண்டான அழைப்பினாலே நீங்கள் ஒரே நம்பிக்கைக்கு அழைக்கப்பட்டதுபோல, ஒரே சரீரமும், ஒரே ஆவியும் உண்டு, ஒரே கர்த்தரும், ஒரே விசுவாசமும், ஒரே ஞானஸ்நானமும், எல்லாருக்கும் ஒரே தேவனும் பிதாவும் உண்டு, அவர் எல்லார்மேலும், எல்லாரோடும், உங்கள் எல்லாருக்குள்ளும் இருக்கிறவர்.”– எபேசியர் 4: 4–6

- ☐ ஞானஸ்நானம் நம்மை இரட்சிக்காது. ஆனால் இரட்சிக்கப் பட்டவர்கள் ஞானஸ்நானம் எடுக்க வேண்டும்.
- ☐ ஞானஸ்நானம் என்பது ஒரு குறிப்பிட்ட சபையின் அல்லது ஒரு சபைப் பிரிவினரின் உபதேசம் அல்ல.
- ☐ ஞானஸ்நானம் நிறைவேற்ற வேண்டிய தேவ நீதி.

“அப்பொழுது யோவானால் ஞானஸ்நானம் பெறுவதற்கு இயேசு கலிலேயாவைவிட்டு யோர்தானுக்கு அருகே அவனிடத்தில் வந்தார். யோவான் அவருக்குத் தடை செய்து: நான் உம்மாலே ஞானஸ்நானம்

பெறவேண்டியதாயிருக்க, நீர் என்னிடத்தில் வரலாமா என்றான். இயேசு அவனுக்குப் பிரதியுத்தரமாக: இப்பொழுது இடங்கொடு, இப்படி எல்லா 18

நீதியையும் நிறைவேற்றுவது நமக்கு ஏற்றதாயிருக்கிறது என்றார். அப்பொழுது அவருக்கு இடங்கொடுத்தான்.''– மத்தே. 3: 13–15

## நீங்கள் இதுவரை ஞானஸ்நானம் எடுத்திராவிட்டால்

இதை வாசிக்கிற அன்பானவர்களே! நீங்கள் ஆண்டவராகிய இயேசு கிறிஸ்துவை உங்கள் சொந்த இரட்சகராக ஏற்றுக்கொண்ட விசுவாசியாக இருக்கலாம், அல்லது ஞானஸ்நானத்தின் சத்தியத்தை இதுவரை அறியாமல் இருந்திருக்கலாம், அல்லது ஞானஸ்நானத்தின் உபதேசத்தை தவறாகப் புரிந்திருக்கலாம். எதுவாய் இருப்பினும் இந்தப் புத்தகத்தில் வேத அடிப்படையில் சொல்லப்பட்டிருக்கும் உண்மைகளைக் கருத்துடன் சிந்தித்துப் பாருங்கள். திறந்த உள்ளத்தாடு கர்த்தருடைய சத்தத்தைக் கேட்க உங்கள் மனதை ஆண்டவருக்கு நேராக ஒருமுகப்படுத்துங்கள். சத்தியத்திற்குக் கீழ்ப்படிதல் ஆசீர்வாதத்தை கொண்டுவரும்.

''அதற்குச் சாமுவேல்: கர்த்தருடைய சத்தத்துக்குக் கீழ்ப்படிகிறதைப் பார்க்கிலும், சர்வாங்க தகனங்களும் பலிகளும் கர்த்தருக்குப் பிரியமாயிருக்குமோ? பலியைப் பார்க்கிலும் கீழ்ப்படிதலும், ஆட்டுக்கடாக்களின் நிணத்தைப்பார்க்கிலும் செவி கொடுத்தலும் உத்தமம்.''– 1 சாமுவேல் 15: 22

நீங்கள் ஞானஸ்நானம் எடுக்கும்போது உங்களையோ, ஞானஸ்நானம் கொடுப்பவரையோ அல்லது சபையையோ பிரியப்படுத்துவதில்லை. உங்கள் கீழ்ப்படிதல் மூலமாக ஆண்டவரைப் பிரியப் படுத்துகிறீர்கள்.

''அப்பொழுது அவன் (அனனியா): நம்முடைய முன்னோர்களின் தேவனுடைய திருவுளத்தை நீ அறியவும், நீதிபரரைத் தரிசிக்கவும், அவருடைய திருவாய்மொழியைக் கேட்கவும், அவர் உன்னை முன்னமே தெரிந்துகொண்டார். நீ கண்டவைகளையும் கேட்டவைகளையும் குறித்துச் சகல மனுஷருக்கு முன்பாக அவருக்குச் சாட்சியாயிருப்பாய். இப்பொழுது நீ தாமதிக்கிறதென்ன? நீ எழுந்து கர்த்தருடைய நாமத்தைத் தொழுதுகொண்டு, ஞானஸ்நானம்பெற்று, உன் பாவங்கள் போகக் கழுவப்படு என்றான்.'' — அப்போ.22: 14–16

ஞானஸ்னானம் எடுக்க வேண்டும் என்ற தெளிவான கட்டளையை ஆண்டவர் கொடுத்திருக்கிறார். எனவே, அதற்கு அமைய ஆவிக்குரிய ஒரு ஊழியரின் ஆலோசனையைப் பெற்று ஜெபத்தோடும், தேவனுடைய வழி நடத்துதலோடும் 19

தாமதிக்காமல் ஞானஸ்நானம் பெற்றுக்கொள்ள வேண்டும். ஒரு கிறிஸ்தவனுடைய வாழ்க்கையில் ஞானஸ்நானம் என்பது ஒரு மத நம்பிக்கைக்குரிய வெறுமையான சடங்காச்சார செய்கையல்ல. அது உண்மையான ஆவிக்குரிய அனுபவத்தை விளக்குகின்ற அடையாளச் செய்கையாகும். மேலும் ஞானஸ்நானம் என்பது ஒரு விசுவாசியின் வாழ்க்கையில் ஒரு மறக்கமுடியாத, மறுபடியும் நினைவிற்குக் கொண்டுவரவேண்டிய முக்கிய நிகழ்ச்சியாகும்.

''அப்பொழுது யோவானால் ஞானஸ்நானம் பெறுவதற்கு இயேசு கலிலேயாவைவிட்டு யோர்தானுக்கு அருகே அவனிடத்தில் வந்தார். யோவான் அவருக்குத் தடை செய்து: நான் உம்மாலே ஞானஸ்நானம் பெறவேண்டியதாயிருக்க, நீர் என்னிடத்தில் வரலாமா என்றான். இயேசு அவனுக்குப் பிரதியுத்தரமாக: இப்பொழுது இடங்கொடு, இப்படி எல்லா நீதியையும் நிறைவேற்றுவது நமக்கு ஏற்றதாயிருக்கிறது என்றார். அப்பொழுது அவருக்கு இடங்கொடுத்தான். இயேசு ஞானஸ்நானம் பெற்று, ஜலத்திலிருந்து கரையேறினவுடனே, இதோ, வானம் அவருக்குத் திறக்கப்பட்டது, தேவ ஆவி புறாவைப்போல இறங்கி, தம்மேல் வருகிறதைக் கண்டார். அன்றியும், வானத்திலிருந்து ஒரு சத்தம் உண்டாகி: இவர் என்னுடைய நேசகுமாரன், இவரில் பிரியமாயிருக்கிறேன் என்று உரைத்தது.''– மத்தே. 3: 13–17

ஆண்டவராகிய இயேசு தேவ நீதிக்குஅமைய பகிரங்கமாக ஞானஸ்நானம் பெற்றபோது பரிசுத்த ஆவியானவர் புறாவைப்போல அவர்மேல் இறங்கினதையும்; இவர் என்னுடைய நேசகுமாரன், இவரில் பிரியமாயிருக்கிறேன் என்ற சத்தம் பிதாவான தேவனிடத்திலிருந்து உரைத்ததுபோலவே, இன்றும் ஒருவர் தேவ நீதிப்படி தன்னை ஒப்புக்கொடுத்து முழுக்கு ஞானஸ்நானம் பெறும்போது பரிசுத்த ஆவியானவர் அவருக்குள் வந்து வாசம்செய்வதும்; அந்த நபர் தேவனுடைய நேச குமாரன் (குமாரத்தி) என்று அவர்மேல் பிரியப்பட்டு, பரலோகத்தில் ஞாபகப் புத்தகத்தில் அவருடைய பெயர் எழுதப்படுகிறது. இது எவ்வளவு உண்மையும், சத்தியமுமான நிலைப்பாடு என்பதை சரிவரப் புரிந்த எவரும் முழுக்கு ஞானஸ்நானம் எடுப்பதில் தாமதிக்க மாட்டார்கள். எனவே, இப்போது இதை அறிந்துகொண்ட நீங்களும் முழுக்கு ஞானஸ்நானம் பெற உங்களை ஆயத்தப்படுத்துங்கள். 20

## நீங்கள் ஞானஸ்நானம் பெற்றிருந்தால்

இந்தப் புத்தகத்தை வாசிக்கின்ற நீங்கள் கர்தருக்குக் கிழ்ப்படிந்து ஞானஸ்நானம் பெற்றிருக்கலாம், மேலும் தொடர்ந்து கீழ்ப்படிதலின் பாதையில் நீங்கள் முன்னேற வேண்டும். ஞானஸ்நானம் பெறுதல் ஆவிக்குரிய வாழ்க்கையின் முன்னேற்றத்தில் முக்கியமான ஒரு முதற் படியாகும். கிறிஸ்தவ வாழ்க்கையில் தொடர்ந்து வளர்ச்சி பெறுவதும் முன்னேறுவதும் "சீஷத்துவம்" என்று அழைக்கப்படுகிறது. நீங்கள் வெறும் விசுவாசிகளாக அல்ல, உண்மையான சீஷர்களாய் ஆண்டவருக்கென்று அதிகமதிகமாய் பயன்பட வேண்டும். சீஷத்துவம் என்றால்: – பின்பற்றுதல், கற்றுக் கொள்ளுதல், நிலைத்திருத்தல், பயன்படுதல் என்பவை எல்லாம் அடங்கும்.

,,நான் ஆண்டவராகிய இயேசு கிறிஸ்துவின் சீடன், நான் ஒவ்வொரு நாளும் அவரை நெருக்கமாகப் பின்பற்றுகிறவன்" என்ற இதயத் துடிப்போடு நாம் ஒவ்வொருவரும் வாழ வேண்டும்.

ஆண்டவராகிய இயேசு கிறிஸ்துவை ஏற்றுக்கொண்டிருக்கிற உங்கள் உள்ளத்தில் பரிசுத்த ஆவினவர் தங்கியிருக்கிறார். மேலும் ''பரிசுத்த ஆவியானவரால் நிரப்பப்படுதல்'' என்ற அனுபவத்தை நீங்கள் பெற்றுக் கொள்ள வேண்டும். பரிசுத்த ஆவியானவரின் நிறைவைப் பெறுவது அல்லது அவருடைய ஆளுகைக்குள்

வருவது என்ற அனுபவம் ஒரு தனிப்பட்ட குறிப்பிடக்கூடிய சிறப்பான அனுபவமும், ஒரு அற்புதமான பாக்கியமுமாகும். இதைத் தொடர்ந்து ஒவ்வொரு நாளும் ஆவியானவரின் நிறைவுக்குள்ளும், கட்டுப்பாட்டிற்குள்ளும் நிலைத்திருக்க வேண்டிய அன்றாட அர்ப்பணிப்பு மிகவும் தேவை.

பரிசுத்த ஆவியானவர் ஏதோ மின்சாரம் அல்லது காற்றுப் போன்ற ஒரு சக்தியல்ல. அவர் ஆள் தன்மையுடையவர். பரிசுத்த ஆவியானவரால் நிரப்பப்படுவது வல்லமையான ஒரு அனுபவமாகும். இது எல்லா நேரங்களிலும் உணர்ச்சிவசமான அல்லது உணர்ச்சியைச் சார்ந்த அனுபவமாக இருப்பதில்லை. பரிசுத்த ஆவியானவர் ஒரு விசுவாசியை நிரப்பும்போது வரங்களைத் தந்தருளுகிறார். பொதுவாக ''பரிசுத்த ஆவியின் அபிஷேகம்'' என்று சொல்லப்படும் இந்த அனுபவத்தைப் பெறுகிறவர்களுடைய ஜெப வாழ்க்கையில் பெருமளவிற்கான மாற்றங்கள் காணப்படுகின்றன. பரிசுத்த ஆவியானவரின் நிறைவுக்குள் வாழ்கிறவர்கள் பரிசுத்தமாக வெற்றியுடன் வாழ்வார்கள்.

மேலும் ஆண்டவராகிய இயேசு கிறிஸ்துவுக்காக வைராக்கியத்துடனும் வல்லயையாகவும் பயன்படுவார்கள். 21

## ஞானஸ்நானம் எடுத்தபிறகு என்ன செய்யவேண்டும்?

ஞானஸ்நானம் எடுப்பது கிறஸ்தவ வாழ்க்கையிலே ஓர் ஆரம்பமே. அதையடுத்து ஆவிக்குரிய அனுபவத்திலும், தேவ அன்பிலும், பயபக்தியான வாழ்க்கையிலும் வளர வேண்டும். மேலும் ஞானஸ்நானத்தின் ஆவிக்குரிய உண்மையை அடிக்கடி நினைவுபடுத்திக் கொள்ளவேண்டும். நீங்கள் வேறு பிரிக்கப்பட்வர்கள், தேவனுக்கென்று பிரத்தியேகப் படுத்தப்பட்டவர்களோடு ஒருமனப்பாட்டில் இணைக்கப் பட்டிருக்கிறீர்கள். எனவே ஆவிக்குரிய சபை மக்களோடு ஐக்கியத்திலும், அந்நியோன்யத்திலும் உறுதியாய்த் தரித்திருக்க வேண்டும். மேலும் அடிக்கடி மற்ற விசுவாசிகளைச் சந்தித்து ஒருவரோடு ஒருவர் வேதாகம சத்தியங்களைப் பற்றியும், ஆவிக்குரிய அனுபவங்களைப் பற்றியும் உரையாடி, ஒன்றுகூடி ஜெபிக்க வேண்டும்.

## அப்போஸ்தலர் காலத்தில் நடந்தது

''அவனுடைய வார்த்தையைச் சந்தோஷமாய் ஏற்றுக்கொண்டவர்கள் ஞானஸ்நானம் பெற்றார்கள். அன்றையத்தினம் ஏறக்குறைய மூவாயிரம்பேர் சேர்த்துக்கொள்ளப்பட்டார்கள். அவர்கள் அப்போஸ்தலருடைய உபதேசத்திலும், அந்நியோந்நியத்திலும், அப்பம் பிட்குதலிலும், ஜெபம்பண்ணுதலிலும் உறுதியாய்த் தரித்திருந்தார்கள். எல்லாருக்கும் பயமுண்டாயிற்று. அப்போஸ்தலர்களாலே அநேக அற்புதங்களும் அடையாளங்களும் செய்யப்பட்டது. விசுவாசிகளெல்லாரும் ஒருமித்திருந்து, சகலத்தையும் பொதுவாய் வைத்து அநுபவித்தார்கள். காணியாட்சிகளையும் ஆஸ்திகளையும் விற்று, ஒவ்வொருவனுக்கும் தேவையானதற்குத்தக்கதாக அவைகளில் எல்லாருக்கும் பகிர்ந்துகொடுத்தார்கள். அவர்கள் ஒருமனப்பட்டவர்களாய்த் தேவாலயத்திலே அநுதினமும் தரித்திருந்து, வீடுகள் தோறும் அப்பம்பிட்டு மகிழ்ச்சியோடும் கபடமில்லாத இருதயத்தோடும் போஜனம்பண்ணி, தேவனைத் துதித்து, ஜனங்களெல்லாரிடத்திலும் தயவுபெற்றிருந்தார்கள். இரட்சிக்கப்படுகிறவர்களைக் கர்த்தர் அநுதினமும் சபையில் சேர்த்துக்கொண்டு வந்தார்.''– அப்போ. 2: 41–47

இரட்சிக்கப்பட்ட சகோதரனே! சகோதரியே!!

- ☐ உங்களுடைய ஒவ்வொரு நினைவும் சிந்தனையும், வார்த்தையும் செய்கையும், விருப்பமும் தீர்மானமும் ஆண்டவராகிய இயேசு கிறிஸ்துவை பிரியப்படுத்துகிறதாய் இருக்க ணேடும்.
- ☐ நீங்கள் அனுதினமும் ஜெபத்திலும், பரிசுத்த வேதாகமத்தை வாசிப்பதிலும், தேவனோடு உள்ள நெருங்கிய உறவிலும், அன்பிலும்



நிலைத்திருந்து ஆண்டவருக்கென்று சாட்சியாக வாழ்வதிலும் முன்னேற வேண்டும்.

- ☐ ஞாயிற்றுக் கிழமைதோறும் மற்ற விசுவாசிகளுடன் சேர்ந்து தேவனை ஆராதிக்க தவறாது ஆலயத்திற்குச் செல்ல வேண்டும். மேலும் ஆவிக்குரிய ஒரு திருச்சபையில் ஓர் அங்கத்தவராய் இருந்து ஊழியத்திற்கு ஒத்தாசையாய் செயற்பட வேண்டும்.
- ☐ ஆண்டவராகிய இயேசு கிறிஸ்துவை மற்ற மக்களுக்கு அறிவித்து, சாட்சியுள்ள ஜீவியம் ஜீவித்து, அநேகரை கிறிஸ்துவுக்கென்று ஆதாயப்படுத்த வேண்டும்.
- ☐ உங்களுடைய வருமானத்தில் பத்தில் ஒரு பங்கை (தசம பாகம்) கர்த்தருக்கென்று கொடுப்பதிலும், ஊழியத்திற்கென்று மேலும் காணிக்கையாக மனம் உகந்து கொடுப்பதும் உங்களுக்கு ஆசீர்வாதமாக அமையும். உற்சாகமாகக் கொடுக்கிறவர்களிடத்தில் தேவன் பிரியமாயிருக்கிறார்.

''மனுஷன் தேவனை வஞ்சிக்கலாமா? நீங்களோ என்னை வஞ்சிக்கிறீர்கள். எதிலே உம்மை வஞ்சித்தோம் என்கிறீர்கள்? தசமபாகத்திலும் காணிக்கைகளிலுந்தானே. நீங்கள் சபிக்கப்பட்டவர்கள், ஜனத்தாராகிய நீங்கள் எல்லாரும் என்னை வஞ்சித்தீர்கள். என் ஆலயத்தில் ஆகாரம் உண்டாயிருக்கும்படித் தசமபாகங்களையெல்லாம் பண்டசாலையிலே கொண்டு வாருங்கள், அப்பொழுது நான் வானத்தின் பலகணிகளைத் திறந்து, இடங்கொள்ளாமற்போகுமட்டும் உங்கள்மேல் ஆசீர்வாதத்தை வருஷிக்கமாட்டேனோவென்று அதினால் என்னைச் சோதித்துப் பாருங்கள் என்று சேனைகளின் கர்த்தர் சொல்லுகிறார்.''– மல்கியா 3: 8–10

- ☐ ஞானஸ்நானம் பெற்ற விசுவாசிகள் அடிக்கடி திருவிருந்தில் (இராப் போசனம்) பங்கெடுக்க வேண்டும். அப்பம் பிட்குதல் அல்லது கர்த்தருடைய பந்தி என்று கூறப்படும் திருவிருந்து ஆண்டவராகிய இயேசு கிறிஸ்து விசுவாசிகளுக்கு அளித்திருக்கும் ஒரு பெரிய பாக்கியம். அதில் பங்கு பெறுபவர் தற்பரிசோதனை செய்து, ஒப்புரவாக வேண்டியவர்களுடன் சீர் பொருந்தி, பரிசுத்தத்திற்குரிய தகுந்த ஆயத்தத்துடன் திருவிருந்தில் பங்குகொள்ள வேண்டும். அப்பம் பிட்டு, இரசம் அருந்துவதும் ஒரு அடையாளச் செய்கையாக இரப்பினும், அது கிறிஸ்துவின் மரணத்தை நினைவுகூர்ந்து அவருடைய வருகையை எதிர்நோக்கும் விசுவாசிகள் ஒருவரோடு

ஒருவர் ஐக்கியப்படவும், தேவனோடு அவர்கள் கொண்டிருக்கும் ஐக்கியத்தை மேலும் உறுதிப்படுத்திக் கொள்ளவும் திருவிருந்து ஒரு ஆதாரமாய் இருக்கிறது.

(1 கொரிந்தியர் 11: 23-34 பகுதியை வாசியுங்கள்) 23

□ அனுதினமும் ஆண்டவராகிய இயேசு கிறிஸ்துவுக்கு உங்களை ஒப்புவித்து, பரிசுத்த ஆவியின் நிறைவைப் பெற்று பரிசுத்தமாக வாழ வேண்டும்.
மற்ற விசுவாசிகளை உற்சகப்படுத்தி நீங்கள் கற்றுக்கொண்ட இந்த உபதேசங்களை அவர்களோடு பகிர்ந்து சாட்சியுள்ள வாழ்க்கை வாழவேண்டும்.
□ ஆண்வராகிய இயேசு கிறிஸ்துவின் முன்மாதிரியைப் பின்பற்றி ஞானஸ்நானம் எடுத்தவர்கள், எல்வாவற்றிலும் அவரையே தமக்கு முன்மாதிரியாக வைத்து ஒவ்வொரு நாளும் அவரைப்போல வாழ முற்பட வேண்டும். விசுவாசிகளுக்கும் பாவம் செய்யக்கூடிய தூண்டுதல் அல்லது சூழ்நிலை வரலாம்; அதற்கு இடங்கொடாமல் பரிசுத்தத்திற்குரிய வெற்றி வாழ்க்கையில் முன்னேற வேண்டும். கிறிஸ்தவனாக இருப்பதனால் போராட்டங்களும், நிந்தைகளும், பாடுகளும் வரலாம். சோர்ந்து போகாமல் தேவ கிருபையோடு உறுதியாய் கிறிஸ்துவுக்குள் நிலைத்திருக்க வேண்டும்.

" ... உலகத்தில் உங்களுக்கு உபத்திரவம் உண்டு, ஆனாலும் திடன்கொள்ளுங்கள், நான் உலகத்தை ஜெயித்தேன். என்றார்."- யோவான் 16: 33 24
அன்பான சகோதரனே! சகோதரியே!!
ஞானஸ்நானத்தைக் குறித்த உபதேசத்தை வேத வாக்கியங்களிலிருந்து எடுத்து விபரித்த விளக்கங்களை இச் சிறிய புத்தகத்திற்கூடாக அறிந்த நீங்கள், இனியும் காலம் தாமதிக்காமல் சத்தியத்தின் அடிப்படையிலே கீழ்ப்படிந்து உங்களை ஒப்புக் கொடுத்து முழுக்கு ஞானஸ்நானம் பெற்று, பரிசுத்த ஆவியானவரின் வழி நடத்துதலோடு பரிசுத்த வாழ்க்கை வாழ்ந்து பரலோக இராட்சியத்திற்குச் சொந்தக்காரர் என்ற உரிமையோடு வாழுங்கள். ஆண்டவராகிய இயேசு கிறிஸ்துதாமே உங்களை ஆசீர்வதிப்பாராக. ஆமென்.

**பாஸ்டர் அல்பிரட் செருபிம்**
**மீட்பர் கிறிஸ்து சபை**
**பிரம்டன், கனடா.**

**Pastor S. Alfred Cherubim**
**Redeemer Christ Assembly**
**Brampton, CANADA**
**647 – 271 7645**
**Web site: www.redeemerchristassembly.org**